# தமிழீழ சுதந்திர சாசனம் பற்றிய அறிமுகக் கையேடு



தமிழீழ சுதந்திர சாசன முரசறைவு
Promulgation of Tamil Eelam Freedom Charter
"May 18th, 2013"

அன்பானவர்களே!

உலகத் தமிழ் மக்கள் அனைவரும் ஒன்றிணைந்து தமிழீழ சுதந்திர சாசனம் ஒன்றை முரசறையவிருப்பதனைத் தாங்கள் அறிந்திருப்பீர்கள். 2012ம் ஆண்டு நவம்பர் - டிசெம்பர் மாதங்களில் இலண்டன் மாநகரில் நடந்தேறிய நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தின் நான்காவது நேரடி அரசவை அமர்வில் இத் தீர்மானம் அரசவையால் எடுக்கப்பட்டிருந்தது.



முள்ளிவாய்க்கால் இனஅழிப்பு நிகழ்ந்தேறி நான்கு ஆண்டுகள் முடிவடையும் காலகட்டத்தில் எதிர்வரும் மே மாதம் 15 தொடக்கம் 18ம் திகதிவரை அமெரிக்காவின் லங்காஸ்ரர் பென்சில்வேனியா நகரில் நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தினால் ஒருங்கமைக்கப்படும் மாநாட்டில் தமிழீழ சுதந்திர சாசனம் முரசறையப்படுகிறது.

அமெரிக்காவில் அடிமைத் தளையை அரசியலமைப்புச் சட்டம் மூலமாக சட்டவிரோதமாக்கிய,மக்களுக்கிடையிலான சமத்துவத்தை உறுதிசெய்த, சகல மக்களின் வாக்குரிமைகளை உறுதிசெய்த 13வது, 14வது, 15வது அமெரிக்க அரசியலமைப்பு சட்டத்திருத்தங்களின் உருவாக்கத்தில் முக்கிய பங்கு வகித்த தாடியஸ் ஸ்டீபன்ஸ் (Thaddeus Stevens) வாழ்ந்த நகர் லங்காஸ்ரர் பென்சில்வேனியா என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் அமெரிக்க ஜனாதிபதி ஆபிரகாம் லிங்கனின் 1863ம் ஆண்டு விடுதலைப் பிரகடனத்தின் (Emancipation Proclamation) 150வது ஆண்டில் தமிழீழ சுதந்திர சாசனம் முரசறையப் படுவதும் குறிப்பிடத்தக்கது.

நாடுகடந்த தமிழீழ அரசாங்கம் அனைத்து தமிழ் அமைப்புக்களுடனும் இணைந்து தமிழீழ சுதந்திர சாசனத்தினை உருவாக்கும் செயற்பாடுகளில் தற்பொழுது ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது.

இச் சுதந்திர சாசனம் தமிழீழ மக்களின் சுதந்திர வேட்கையின் வெளிப்பாடாக தமிழீழ மக்களதும் தமிழீழ விடுதலைக்காய் உழைக்கும் உலகத் தமிழ் மக்கள், சிங்கள மற்றும் அனைத்துலகச் சமூகத்தின் முற்போக்காளர்களினதும் பங்குபற்றலுடன் உருவாக்கப்படுகின்றது.

விடுதலை, சுதந்திரம் என்பவை அதி உன்னதமான எண்ணக்கருக்கள். விடுதலை என நாங்கள் கருதுவது இனத்துவ, வர்க்க, சாதிய, பால், பாலின, பாலியல் தெரிவுகள் தொடர்பான ஒடுக்குமுறைகள் உட்பட அனைத்து ஒடுக்கு முறைகளிலிருந்தும் விடுதலை பெறுவதையே ஆகும். உலகில் வாழும் மக்கள் அனைவரும் விடுதலை அடைந்த மனிதர்களாக வாழும் நிலை இருத்தலே மனித இனத்தின் அதி உன்னத இலட்சியமாக இருக்க முடியும். தனிமனித விடுதலை முதற்கொண்டு ஒட்டு மொத்தமாக ஒரு மக்கள் கூட்டத்தின் அரசியல் விடுதலை வரையாக விடுதலை குறித்து பல்வேறு தளங்களில் மனிதர்கள் போராடி வருகிறார்கள். நாம் இங்கு ஈழத் தமிழர் தேசத்தின் அரசியல் விடுதலை குறித்து அக்கறை கொள்கிறோம். இந்த அரசியல் விடுதலை சமூக விடுதலையுடன் இணைந்ததாக இருக்கும் வகையிலான நோக்கைக் கொண்டவர்களாக உள்ளோம். நமது சிந்தனைகளையும் தொலைநோக்கையும் நாம் சுதந்திர சாசனமாக முரசறையும் போது அது நமக்கு மட்டுமல்ல உலகில் ஒடுக்கப்பட்டுவரும் மக்கள் அனைவருக்கும் உற்சாகம் கொடுக்கும், தோழமை பாராட்டும் ஒரு செயற்பாடாக அமையும் என நாம் கருதுகிறோம்.

தழிழீழ மக்களின் தேசியப் பிரச்சினைக்கு சுதந்திரமும் இறைமையும் உடைய தமிழீழத் தனியரசு ஒன்றுமட்டுமே தீர்வாக அமைய முடியும் என்பதே நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தின் உறுதியான நிலைப்பாடாக இருந்து வருகிறது. ஈழத் தமிழ்த் தேசிய இனத்தின் நிலைப்பாடும் இதுவேதான்.

இந்நிலையில் தாயக மக்களுடன் புலம்பெயர்ந்து வாழும் தமிழ் மக்களும் தமக்கென்றொரு அரசு அமைவதனை அவர்களின் அரசியல் பெருவிருப்பாகவே கொண்டுள்ளனர்.

ஈழத் தாயகத்தில் வாழும் நமது மக்களுக்கு அவர்கள் அரசியல் விருப்பு வெறுப்புக்களைச் சுதந்திரமாக வெளியிடுவதற்கான அரசியல்வெளி, ஜனநாயகவெளி அங்கு இல்லை. தமிழீழ மக்களின் தேசியப் பிரச்சினைக்கு இரு நாடுகள் என்ற தீர்வுமுறையினை உள்ளடக்கியதான கருத்து வெளிப்பாட்டுக்கு சிறிலங்காவின் ஆறாவது திருத்தச் சட்டம் தடையாக உள்ளது. சட்டங்கள் மட்டுமல்ல ஈழ மண்ணை ஆக்கிரமித்து நிற்கும் சிங்கள இராணுவமும் மக்களுக்கான அரசியல் வெளியை இறுக அடைத்து வைத்திருக்கிறது.

இதனால் தாயகத்தில் வாழும் தமிழீழ மக்கள் தமது உண்மையான அரசியல் பெருவிருப்பான தமிழீழத் தனியரசு என்ற நிலைப்பாட்டை தமது ஆழ் மனதுக்குள் புதைத்து வைத்திருக்க வேண்டிய நிலையில் உள்ளார்கள். ஈழ மண்ணின் விடுதலைக்காய் குருதி சிந்தி, தம்மை ஈகம் செய்த மாவீரர்கள் நினைவுகளுடன், அவர்களது இலட்சியக்கனவான தமிழீழத் தனியரசினையும் தமது மனக்கூடுகளுக்குள் இறுகப்பிணைத்து வைத்துள்ளார்கள்.

இதனால் உலகத் தமிழ் மக்களால் முரசறையப்படும் இந்தத் தமிழீழ சுதந்திர சாசனம் தாயக மக்களது குரலாகவும் ஒலிக்கிறது.

ஈழத் தமிழர் தேசம் தற்போது நாடுகடந்த ஒரு தேசமாகவும் பரிணமித்து விட்டது. அரசியல், சமூகம் மற்றும் குடும்பம் சார்ந்த விடயங்கள் அனைத்திலும் நாடுகடந்த நிலையில் முடிவுகளை எடுக்கும் ஒரு வாழ்க்கை முறையைக் கொண்டதாக தமிழர் தேசம் மாற்றம் கண்டிருக்கிறது.

இது ஈழத் தமிழர் தேசத்துக்கு மட்டுமே உரிய ஒரு சிறப்பு நிலையல்ல. புலம்பெயர்ந்து வாழும் பல நாடு கடந்த சமூகங்கள் தமது வாழ்க்கையை இவ்வாறுதான் ஒழுங்கமைத்துள்ளனர்.

இவ்வாறு புலம் பெயர்ந்து வாழ்வமைத்திருக்கும் ஒரு சூழலில், தமது அரசியற் பிரதிநிகளை ஜனநாயக வழிமுறையிலான தேர்தல் முறையூடாகத் தேர்ந்தெடுத்து, நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தை அமைத்தவர்கள் என்ற வகையில் ஈழத் தமிழ் புலம் பெயர் மக்கள் உலகின் முன்னோடிகளாக உள்ளனர்.

தாயகத்தில் நடாத்தப்பட்ட தேர்தல்களில் மக்கள் பங்கு பெறும் வீதத்திற்குக் குறையாத வகையில் புலத்தில் நடாத்தப்பட்ட தேர்தல்களிலும் மக்கள் பங்கெடுத்து வாக்களித்திருந்தார்கள்.

மக்களால் ஜனநாயக வழியில் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்பு என்ற வகையில் நமது மக்களது அரசியல் பெருவிருப்பினை

பிரதிபலித்து நிற்க வேண்டிய உரிமையும், கடமையும், பொறுப்பும் நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்துக்கு உண்டு.

தமிழீழ சுதந்திர சாசனத்தை உருவாக்குவதில் உலகத் தமிழ் மக்களின் பங்கு முழுமையாக எதிர்பார்க்கப்படுகின்றது. சாசனத்தில் உள்ளடக்கப்பட வேண்டிய விடயங்கள் தொடர்பாகவும், அவை எத்தகைய நிலைப்பாட்டைக் கொண்டதாக அமைய வேண்டும்

என்பது தொடர்பாகவும் மக்கள் கருத்துக்களைக் கேட்டறிவதற்கான கூட்டங்களை மக்களிடையே நடாத்துவதற்கான ஏற்பாடுகளை நாடுகடந்த தமிழீழ அரசாங்கமும், ஏனைய அமைப்புகளும் செய்து வருகின்றன.

மக்களின் கருத்தறிவதற்கான கேள்விக் கொத்தொன்றும் தயாரிக்கப்பட்டு அவர்களுக்கு வழங்கப்படுகிறது. இதன் முதற்கட்டமாக தமிழீழ சுதந்திர சாசனமொன்றை முரசறைவதன் அவசியம் குறித்தும் அதன் நன்மைகள் குறித்தும் எமது கருத்துக்களை மக்கள் முன்வைத்தல் அவசியம் எனக் கருதியமையின் நிமித்தம் தமிழீழ சுதந்திர சாசனம் குறித்த விளக்கங்களுடன் இக் கையேடு வெளிவருகிறது.

உலகில் சுதந்திரத்துக்காகப் போராடும் மக்கள் தமது விடுதலை வேட்கையினை அனைத்துலகிற்கும் முரசறைவித்து, அனைத்துலக மக்களதும், அரசுகளதும் ஆதரவினைத் தமது விடுதலைப் போராட்டத்துக்கு வென்றெடுக்கும் வகையில் சுதந்திர சாசனத்தினை வெளியிட்டு வந்துள்ளார்கள்.

தென்னாபிரிக்கச் சுதந்திரப் போராட்ட காலத்தில் அந்நாட்டு மக்கள் தென்னாபிரிக்க காங்கிரஸ் தலைமையில் தமது சுதந்திர சாசனத்தை முரசறைவித்தார்கள்.

பாலஸ்தீன மக்களின் தேசிய சாசனம் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தின் ஊடாக முரசறையப்பட்டது.

இச் சுதந்திர சாசனங்கள் மக்களின் விடுதலை வேட்கையின் குறியீடுகளாக அமைந்ததுடன் விடுதலை கோரும் மக்களின் விடுதலை கோருவதற்குரிய உரிமையையும், தமக்கென்ற அரசினை அமைக்கவும், ஆளவும் அவர்களுக்கிருந்த வலிமை யையும் வெளிப்படுத்தி நின்றன.

அந்த சுதந்திர சாசனங்கள் தேசங்களின் கொள்கை வகுப்புக்கு அடிப்படையாக அமையக்கூடிய முக்கியமான நிலைப்பாடுகளையும், அரசியல் கூட்டுக்கான எல்லைகளையும் சுட்டி நின்றன. கோட்பாட்டு ரீதியிலும், நடைமுறை ரீதியிலும் போராட்டங்களை வழிநடாத்தி நின்றன. சுருங்கக்கூறின் இம் மக்களது விடுதலைப் பேராட்டப்பாதையில் சுதந்திர சாசனங்கள் மைல் கற்களாக அமைந்திருக்கின்றன.

இவ் அனுபவங்கள் ஊடாகத் தமிழீழ மக்கள் உணர்ந்து கொள்ளக்கூடிய ஒரு முக்கிய செய்தியொன்று உண்டு. நமது விடுதலைப் பயணத்தில் நாம் போக வேண்டிய திசையை, அதற்கு நாம் தேர்ந்தெடுத்துள்ள

பாதையை, அதற்காக நாம் வகுத்துக் கொள்ளும் கொள்கைகளை, நாம் மேற் கொள்ளக்கூடிய கூட்டுச் சேர்வுகளை அடையாளம் காட்டக்கூடிய வகையில் நமது சுதந்திர வேட்கையினை அனைத்துலகத்தின் முன்னால் ஆவணமாக முன்வைத்தல் என்பது நமது சுதந்திரப் பயணத்தினை முன்நோக்கி நகர்த்துவதற்கு நாம் மேற்கொள்ள வேண்டிய முக்கியமானதொரு செயல்முறையாகும்.

இத்தகைய செயல்முறையூடாக நமது மக்களின் அரசியல் தலை விதியினை நாமே தீர்மானிப்பதற்குத் தேவையான பலமான அடித்தளத்தினையும் நாம் இட முடியும். அனைத்துலக அரங்கில் நடைபெறும் அரசியல் சதுரங்கத்தில் ஏனையோர் வகுக்கும் வியூகத்துக்கு உட்பட்டு நாம் செயற்படாமல், நமக்கென்று நாம் வகுக்கும் ஒரு வியூகத்தின் அடிப்படையில் செயற்படுவதற்கும் இச் செயல்முறை துணைபுரியும்.

இவை அனைத்தும் தமிழீழ சுதந்திர சாசனத்தை முரசறைவதற்கான உற்சாகத்தை உலகத் தமிழ் மக்களுக்கு தருகின்றது.

தமிழீழ மக்களைப் பொறுத்த வரையில் தற்போதைய காலகட்டம் மிக முக்கியமானதொரு காலகட்டமாகும். முள்ளிவாய்க்கால் இனஅழிப்பின் பின் தமிழீழ மக்களின் அரசியல் நிலைப்பாட்டில் மாற்றம் ஏற்படும் என்று சிங்களப் பேரினவாதம் எதிர்பார்த்தது.

தமிழீழ மக்கள் தோல்வியினால் சுருண்டு இனி எதுவும் செய்ய முடியாது என்ற இயலாமையால் தன்னிடம் மண்டியிடுவார்கள் என்றே சிங்களம் எதிர்பார்த்தது. தமிழ் அடையாள அரசியலை முடிவுக்கு கொண்டு வந்து, சிறிலங்கா அடையாள அரசியலைத் தமிழர் தாயகப் பகுதிகளில் நிலை நிறுத்தி விட தொடர்ந்தும் முனைகிறது. ஆனால் ஈழத் தமிழ் மக்கள், சிங்கள அரசிடம் மண்டியிடத் தயாராக இல்லை என்பதனை தமக்குக் கிடைக்கும் சந்தர்ப்பங்களில் எல்லாம் தொடர்ச்சியாக வெளிப்படுத்தி வருகின்றனர்.

நாம் ஏற்கனவே குறிப்பிட்டவாறு தனிநாடு குறித்த தமது விருப்புக்களை வெளிப்படுத்த அரசியல் வெளி இல்லாத ஒரு சூழலில், மிகவும் ஒடுக்குமுறைக்குட்பட்டு வாழும் ஒரு சூழலில், சிங்கள இராணுவத்தின் ஆக்கிரமிப்புக்கு உட்பட்ட ஒரு சூழலில், தமது வரையறைகளைப் புரிந்து கொண்ட நிலையில் தங்கள் உணர்வுகளை மக்கள் வெளிப்படுத்தி வருகிறார்கள்.

இது ஈழத் தமிழர் தேசம்! ஒரு போதும் சிங்களப் பேரினவாதத்திடம் தோல்வியடைந்து விடவில்லை என்பதனை அவர்கள் செயற்பாடுகள்

வெளிப்படுத்தி வருகின்றன. ஈழத் தமிழர் தேசத்தின் விடுதலைப் போராட்டத்தில் இது முக்கியமானதொரு வெளிப்பாடாகும்.

சிங்களப் பேரினவாதம் மட்டுமல்ல நாடு பிரியாத வகையில் இலங்கையின் தேசியப் பிரச்சினைக்குத் தீர்வு காணப்படவேண்டும் என்ற நிலைப்பாட்டைக் கொண்டிருந்த அனைத்துலக அரசுகளும் தமிழீழக் கனவு மக்களது மனங்களில் இருந்து அகன்று விடும் என்றே எதிர்பார்த்தனர்.

தாயகத்தில் அரசியல் வெளி இல்லாத காரணத்தால் தாயகத்தில் வெளிப்படும் தமிழ் தேசிய அரசியல் 'இருநாடுகள்' தீர்வு முறையை உள்ளடக்காத நிலையில். புலத்தில் வெளிப்படும் தனித் தமிழ் அரசு குறித்த சுதந்திர வெளிப்பாட்டையும் தாயக வெளிப்பாட்டுக்கு இசைவாக சுருக்கி விட முனையும் ஒரு விருப்பும் இவ் அரசுகளிடம் காணப்படுகிறது. தாயகத்தில் உள்ள நிலைமைகளைக் கவனத்திற் கொண்டு, அங்கு நிலவும் அரசியலை புலம்பெயர்ந்த மக்களும் பின்பற்ற வேண்டும் என்ற எதிர்பார்ப்பும் கொள்கை வகுப்பாளர்களிடையே இருப்பதனையும் அவதானிக்க முடிகிறது.

புலம்பெயர் தேசங்களில் இருக்கும் சுதந்திரவெளி காரணமாகப் புலப்படும் அரசியல் பெருவிருப்பு குறித்த வெளிப்பாட்டினை தொலைதூர தேசிய வாதம் எனவும், தாயகத்தில் வாழும் மக்களுக்கும் தலைவர்களுக்கும் இருக்கக்கூடிய ஆபத்துக்களையும், சிக்கல்களையும் புரிந்து கொள்ளாது மேற்கொள்ளப்படும் பொறுப்பற்ற நடத்தை எனவும் சித்தரிப்போரும் உள்ளனர்.

மேலும் புலம்பெயர் அரசியலை இரு வேறு துருவங்களாகச் சித்தரிக்கும் போக்கும் சிலரிடம் காணப்படுகின்றது. ஆயுதம் தாங்கிய போராட்டம் தோற்கடிக்கப்பட்டு விட்ட காரணத்தால் ஈழத் தமிழர் தேசம் தோல்வியடைந்து விட்டது எனவே சிங்களத்துடன் முரண்படாமல் வாழப் பழகிக் கொள்ள வேண்டும் என்ற உபதேசமும் சிலரிடமிருந்து எழுகிறது.

இந்தத் தமிழீழ சுதந்திர சாசனம் ஊடாக நாம் இக் குற்றச் சாட்டுக்களுக்கெல்லாம் உரிய முறையில் பதிலளிக்கும் வாய்ப்பினைப் பெறுகிறோம்! தமிழீழத் தனியரசுக் கோரிக்கை என்பது வரலாற்று வெற்றிடத்தில் இருந்து உருவாகியதல்ல. இது வரலாற்றின் வளர்ச்சிப் போக்கில் சிங்கள பௌத்த இனவாத அரசு ஈழத் தமிழர் தேசத்தின் இருப்பை அங்கீகரித்து ஏற்றுக் கொள்ளாது திட்டமிட்ட இனஅழிப்பு நடவடிக்கைகள் ஊடாக தமிழர் தேசத்தின் இருப்பைக் கேள்விக்குரியதாக்கிய போதே தமிழீழம் என்ற தனித்தமிழ் நாட்டுக்கான

விருப்பு ஈழத் தமிழர் தேசத்திடம் கருக் கொண்டது.

சிங்கள அரசின் இனவாத அடிப்படையும், மாற்றத்துக்குத் தன்னை உள்ளாக்கி விடமுடியாத அளவுக்கு தொடர்ந்து இறுகிப்போயுள்ள அரசகட்டமைப்பும் எந்தவகையான சமத்துவமான இணைந்த வாழ்வுக்குரிய கதவுகளை இறுக மூடியே வைத்திருக்கிறது.

கடந்த பல தசாப்தங்களாக இலங்கைத்தீவில் சிந்திய தமிழர்களின் குருதி ஈழதேசத்தினை உறைய வைத்த போதும் அது சிங்கள அரசின் இனவாத அடிப்படைகளில் கிஞ்சித்தேனும் மாற்றத்தை ஏற்படுத்தி விடவில்லை. தமிழ் மக்களை ஒரு தேசமாக, தனித்துவமுள்ள மக்களாக ஏற்றுக் கொள்ள சிங்களம் தயாராக இல்லை. இது சிங்கள ஆட்சியாளர்களின் நிலைப்பாடு மட்டுமன்றி சிங்கள அரசின் நிலைப்பாடும்தான் என்பதனை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். இதனால் ஆட்சியாளர்களில் மாற்றம் ஏற்பட்டாலும் அரசின் நிலைப்பாட்டில் எப்போதும் மாற்றம் ஏற்படப் போவதில்லை.

தேசமாக, தனித்துவமுள்ள மக்களாக ஏற்றுக் கொள்ள சிங்களம் தயாராக இல்லை. இது சிங்கள ஆட்சியாளர்களின் நிலைப்பாடு மட்டுமன்றி சிங்கள அரசின் நிலைப்பாடும்தான் என்பதனை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். இதனால் ஆட்சியாளர்களில் மாற்றம் ஏற்பட்டாலும் அரசின் நிலைப்பாட்டில் எப்போதும் மாற்றம் ஏற்படப் போவதில்லை.

இலங்கைத் தீவில் ஈழத் தமிழர் தேசத்துக்கு இரண்டு தெரிவுகளே உள்ளன.

ஒன்று, சிங்கள மேலாதிக்கத்தை ஏற்று சமத்துவமற்ற மக்களாக இரண்டாம் தர குடிமக்களாக வாழ்ந்து சிங்களப் பேரினவாதத்தின் திட்டமிட்ட இனஅழிப்பு நடவடிக்கைகளால் மெல்ல மெல்லக் கரைந்து, வீரியமற்ற உதிரி மக்களாக வாழ்தல். அல்லது தனது சுதந்திரமான, சமத்துவமான, கௌரவமான வாழ்வுக்காகப் போராடி வெற்றி பெற்று தனக்கென்று தனிநாட்டை அமைத்து சுதந்திரமாகவும், சமத்துவமாகவும் வாழ்தல்.

இவை இரண்டும் தான் தமிழர் தேசத்தின் முன்னால் இப்போதும் உள்ள தெரிவுகள்.

நாடு பிரியாத வகையில் ஒன்றுபட்ட இலங்கைத்தீவுக்குள் ஓர் அர்த்தமுள்ள அதிகாரப் பங்கீட்டைக் கொண்ட ஆட்சிமுறையை ஏற்படுத்த அனைத்துலக சமூகம் எடுக்கும் எந்தவகையான

முயற்சிகளையும் சிங்களப் பேரினவாதம் முறியடிக்கும். இதுவே வரலாறு நமக்குக் கற்றுத் தந்திருக்கும் பாடம்.

இந்த வரலாற்றுப் பாடத்தை புறந்தள்ளி நாம் நமது அரசியல் மூலோபாயத்தையும் உத்திகளையும் வகுக்க முடியாது. இதேவேளை அனைத்துலக ரீதியாக உலகத்தில் ஏற்படும் மாற்றங்களையும் நாம் கவனத்திற் கொள்ள வேண்டும்.

இதனால் நாம் நமது சுதந்திர வேட்கையினை அனைத்துலக சமூகத்தால் நிராகரிக்கப்படாத வகையில் புதிய முறையில் வெளிப்படுத்த வேண்டும். ஜனநாயக விழுமியங்களுக்குட்பட்ட வகையில் எமது அரசியல் பெருவிருப்பான சுதந்திரமும் இறைமையும் உடைய தனித் தமிழீழ அரசு எனும் நிலைப்பாட்டை வெளிப்படுத்தி அரசியல் இராஜதந்திர வழியில் எமது போராட்டப்பாதையினை நெறியமைக்கும் போது தார்மீக அடிப்படையில் எமது நிலைப்பாட்டை அனைத்துலக சமூகத்தால் நிராகரிக்க முடியாது.

நலன்சார் அரசியல் அடிப்படையில் அரசுகள் உடனடியாக எமது நிலைப்பாட்டுக்கு ஆதரவு தராவிடினும் கூட அரசியல் நிலைமைகளில் ஏற்படும் மாற்றங்கள் நமக்கு வாய்ப்பான சூழலை ஏற்படுத்தும்.

நாம் முரசறையவுள்ள தமிழீழ சுதந்திர சாசனம் இப் புதிய அணுகுமுறை சார்ந்ததாக அமையும்.

தாயகத்தின் தற்போதைய களநிலை காரணமாக அனைத்துலக சமூகத்துடன் இசைந்து போய் அவர்களது ஆதரவினைப் பெற்றுக் கொள்ளும் நோக்குடன், தாயகத் தலைவர்கள் தமது உத்திகளை வகுத்திருப்பதாகக் கூறப்படும் ஒரு சூழலில் நமது தமிழீழ சுதந்திர சாசனம் இவர்களது முயற்சிகளுக்கு இடையூறாக அமையும் என்றும் நாம் கருதவில்லை.

எம்மைப் பொறுத்த வரையில் சிங்கள அரசு தன்னிடம் குவிந்திருக்கும் எந்தவிதமான அதிகாரத்தையும் பங்கீடு செய்யத் தயாராக இருக்கப் போவதில்லை. இதனால் தாயகத் தலைவர்கள் சிங்கள அரசுடன் பேசித் தமிழர்களின் தேசியப் பிரச்சினைக்குத் தீர்வு காண எடுக்கும் எத்தகைய முயற்சிகளும் வெற்றியினைத் தரப்போவதில்லை. சிங்கள ஆட்சியாளர்களில் மாற்றம் ஏற்பட்டாலும் இதுவேதான் நிலையாக இருக்கும்.

இதனால் தாயகத் தலைவர்களினதும் அனைத்துலக சமூகத்தினரதும் அரசியல் தீர்வு முயற்சிகள் தோல்வியினைத் தழுவும் போது ஈழத்

தமிழர் தேசத்தின் அடுத்த கட்ட நகர்வுக்குத் தேவையான அடிப்படைகளைத் தருவதாக இந்த தமிழீழ சுதந்திர சாசனம் அமையும்.

தமிழீழ சுதந்திர சாசனத்தின் ஊடாக இன்னுமொரு முக்கிய விடயத்தையும் நாம் பதிவு செய்து கொள்ள முடியும். ஒடுக்குமுறை சிறிலங்கா அரசுக்கும் அமையப்போகும் தமிழீழ அரசுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளையும் தமிழீழ சுதந்திர சாசனம் சுட்டி நிற்கும்.

உதாரணமாக பௌத்தத்தை முதல் மதமாகக் கொண்ட மதச்சார்பு அரசாக சிறிலங்கா இருக்க தமிழீழம் மதச்சார்பற்ற அரசாக அமைவதனைக் குறிப்பிடலாம்.

மேலும் சிறிலங்கா அரசு மிகவும் மோசமான முறையில் மனித உரிமைகளை மீறும் அரசாக இருக்க தமிழீழம் உன்னதமான முறையில் மனித உரிமைகளை மதிக்கும் விருப்பும், தகமையும் கொண்டதாகத் தன்னை வெளிப்படுத்தி நிற்பதனை இந்த சுதந்திர சாசனம் பதிவு செய்யும்.

நாளை மலரப்போகும் தமிழீழத்தில் மனித உரிமைகளை உறுதிசெய்யும் தமிழீழ சுதந்திர சாசனம் தமிழீழத்தின் மக்ன காட்டாவாக (Magna Carta) அமையும். இத்தகையதொரு பின்னணியிலேயே உலகத் தமிழ் மக்களால் தமிழீழ சுதந்திர சாசனம் முரசறையப்படுகின்றது.

இது நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தின் முரசறைவு மட்டுமல்ல
ஈழத் தமிழர் தேசத்தின் முரசறைவு !
உலகத் தமிழினத்தின் முரசறைவு !
ஈழத் தேசத்தின் விடுதலையை வேண்டி நிற்கும் அனைவரதும் முரசறைவு !

இச் சாசனம் சிறப்புடன் உருவாக தங்கள் கருத்துக்களை நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்துடன் பகிர்ந்து கொள்ளுங்கள். இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கேள்விக்கொத்தின் ஊடாக உங்கள் எண்ணங்களை வெளிப்படுத்துங்கள்.

தமிழீழ சுதந்திர சாசனத்துடன் உங்களையும் இணைத்துக் கொள்ளுங்கள்.

தமிழரின் தாகம் தமிழீழத் தாயகம்.
மேலதிக தகவல்கள், தொடர்புகளுக்கு:
freedomcharter@tgte.org / 001 212 537 4054

